காலத்தில் சென்னைக் கவர்னராக இருந்த நேபியர் பிரபு (Lord Napier) கிறிஸ்தவக் கலாசாலையின் அபிவிருத்தியைக் காணும் பொருட்டு அங்குவந்து தமக்கிஷ்டமான வகுப்புகளில் சிற்சில கேள்விகளைக் கேட்டுக்கொண்டே பிரவேசபரீக்ஷை வகுப்பிற்கு (Matriculation class) வந்தவர். அவ்வகுப்பிலும் சில கேள்விகளைக் கேட்டார். அக்காலத்து நமதுபிள்ளை தனது வகுப்பிலுள்ள மற்றமாணாக்கர்களைக் காட்டிலும் மிகத்திறமையாய் விடை பகர்ந்த சாதுரியத்தைக் கண்டு வியப்படைந்த நேபியர்பிரபு நமது பிள்ளையைத் தம்மருகில் அழைத்துத் தட்டிக்கொடுத்து "இவ்விளைஞன் கல்வியறிவு இவனது வயதினும் பதின்மடங்கு மேம்பட்டிருக்கின்றது" என்று ஆச்சரியத்துடன் புகழ்ந்து கூறினார். அப்பிரபு இவனது கல்வித்திறத்தை உய்த்துணர்ந்து கூறிய அபிப்பிராயத்திற்குச் சிறிதும்மாறாது பிரவேசபரீக்ஷையிலும் (Matriculation Examination) எப், ஏ, (F A.) பரீக்ஷையிலும் தேறி 1876ஆம் வருஷத்தில்தனது 21 ஆவது வயதில் பி ஏ. (B A.) பட்டமும் பெற்றனர்.

1876 - 77 ஆம் வருஷங்களில் நமது பிள்ளை 'சீதாராமர்' (சீதையும் இராமனும்) (Seetha and Rama) என்னும் பெயர் பூண்ட அரியநூல் ஒன்றை ஆங்கிலபாஷையில் அழகிய செய்யுள் நடையில் அணிபெற இயற்றினார். இஃதே இவர் முதல்முறை எழுதியது. இவ்

வழங்கிய நூலைக்கையிலேற்றுவாசித்த ஆங்கிலக்
கவிகளுள் சிறந்தவர் பலரும் வியந்து கொண்
டாடியதன்றி எண்ணிறந்த ஆங்கிலப்பத்திரி
கைகளும் 'இவரது செய்யுள்நடை நமது மகா
ராணியார் காலத்து ஆஸ்தான கவிரத்நமா
யிருந்த லார்ட் டெனிஸன் பிரபுவின் செய்யுள்
ஆகரத்தூறிப் பிரகாசிப்பவை' என்று புகழ்ந்
துரைத்தன. தமது முயற்சி பலகவிவாணர்க
ளாலும் கொண்டாடப்பட்ட தாயினமைகண்ட
நமதுபிள்ளை தமது செய்கையில் மிக்க ஊக்க
முடையவராய் 'இந்தியக்கதைகள்' (Tales of Ind)
என்னும் பெயர்பூண்ட சிறந்த நூல் ஒன்றை
ஆங்கிலபாஷையில் செய்யுள்நடையில் இரண்
டாவதாக எழுதினார். இந்நூலுக்கு டாக்டர்
மில்லர் துரையவர்கள் (The Hon'ble the Rev
W Millei, M A ,L. L D , C. I. E ) சிறந்தபாயிரம்
ஒன்று எழுதினார். இவ்வரிய நூல் ஆங்கில அர
சாட்சியின் ஆஸ்தான கவிரத்நமாகிய லார்ட்
டெனிஸன் பிரபுவிற்கு உரிமையாக்கப்பட்
டது. இந்நூலைக் கையிலெடுத்தவர் முழுதும்படி
த்து முடிக்காமற் கீழேவைக்கக்கூடாத சொல்
நயம், பொருள்நயம், பாஷைநடை முதலிய
மேம்பாடுடைய தாயிருத்தலின் அதனை ஆங்
கிலபாஷையில் மிக்க வல்லவர்களாகிய மகாகவி
களும் பத்திராதிபர்களும் சிறப்பித்துக் கூறி
னார்கள். அவற்றுட் சிலவற்றை மாத்திரம் இவ்
விடத்துச் சுருக்கி எழுதுகின்றோம்:— லார்ட்
டென்னிசன் (இவர் ஆங்கில அரசாட்சியின்

ஆஸதான கவிரத்னமா யிருநதவா) 'இநதிய
கவிகள இனிமையும, சிறபபும பெற்றவை' என
ரூா. கிராண்ட்டப(இவா சிலகாலத்துககுமுனசெ
னனை கவர்னராக இருநதவா) 'தெனனிநதி
யாவில் சுதேசி ஒருவா தமககு அனனியமா
யுள்ள ஆஙகிலபாஷையில இததகைய கலவித்
திறமும கவித்துவமும பெறறிருபபதைககாண
எனமனம பூரிககினறது தாம அனுபபிய இந்
திய கதைகளுககாக அநேகவநதனம செலுத்
துகினறேன. அககாவியததுளளாகக காணப்
படும சிறநதசெயயுள நடையை அநநியபாஷை
யில எழுதும ஞானததை ஒருவா அடைவது
மிகக அருமையே' எனசசிலாகிததாா. ஆல
பிரட ஆஸடின(அவா தறகாலத்தில ஆங்கிலேய
அரசாட்சியின ஆஸதான கவிரதனமா யிருப்ப
வா) 'தாஙகள அனுபபிய இநதிய கதைகளை
மிக்கவிருபபததோடு கறறுறறேன. தங்களுக்
கு ஆஙகிலபாஷையிலுளள இலககிய இலகக
ணங்களின அமைதிகளை அடைநதிருககும் மே
லான ஞானததைககண்டு மிகக வியப்படைகின்
றேன. தஙகளுடைய கவியில் சொல்நயம், பொ
ருணயம, ஆழ்நத கருத்துக்கள் செவ்வனே அ
மைநதுளளதுமனறித்தொடைநோககும, நடை
நோக்கும் மிகப்பொருத்தமாய் அமைநதுள்ள
ன. தஙகளுககு ஆங்கிலபாஷை அன்னியபாஷை
யாயிராமல் தாய்ப பாஷையாகவே யிருககின்
றது. அன்னியபாஷையில் தாமுடைய வாழ்
நாட்களைச்செலவியற்றிககற்ற தமது ஆங்கிலபா

ஷைத்திறம் ஒன்றே தங்களுடைய இராஜவிசு-
வாசத்தைக் காட்டுகின்றது' என்று புகழ்ந்தார்.
ஜேம்ஸ்பிரைஸ்:= (இவர் பார்லிமெண்டு பொது
ஜனசபையில் ஓர் அங்கமாய் உள்ளவர்; சிறந்த
ஆங்கிலபாஷாவல்லவர்) 'தங்களுடைய கவிகளை
மிக்க விருப்பத்துடனும் அதிக வியப்புடனும்
வாசித்தேன். அக்கவிகளில் அமைந்துள்ள சொ
ற்கட்டுகளையும், எதுகை, மோனைகளின் அமை
திகளையும் காணத்தமக்கு ஆங்கிலபாஷையிற்
தலைகொண்டுள்ள ஞானத்தின் திறமை நன்கு
புலப்படுகின்றது. தங்களுடைய கவியில்

"சுருங்கச் சொல்லல், விளங்கவைத்தல்
நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல்
ஓசையுடைமை"

முதலியசெய்யுள் நயங்கள் யாவும் ஒருங்
கே யமைந்துள்ளன. இதுபோன்ற கவித்திறம்
ஒருவருக்கு அன்னிய பாஷையில் அமைவது
'அரிதினும் அரியதே.' என்று வியந்தார். மற்
றும் பலகவிஞர்கள் 'இந்நூலை இயற்றியவர்
பெயரை யறிந்தாலல்லது இஃது இந்தியா
வின் சுதேசி ஒருவரால் எழுதப்பட்டது என்று
துணிவது எவருக்கும் எளிதாகாது என ஒரு
வாய்ப்பட்டதேபோற் கூறும் சிறப்பினை யுடைய
தா யிருக்கின்றது' என்றார்கள். இவையன்றி
இந்தியக்கதைகளின் மேன்மையையுணர்ந்த 'சா
டர்டேரிவியூ' என்னும் பத்திராதிபர் கூறிய
தாவது:=

'ஒருவர் சிறந்த கருத்துக்களையுமபடி செய்யுளியற்றுவதுமிக்க அருமை. அத்தகைய செய்யுளைப் பற்பலவாய இயற்றும் கவிகளுக்கும் பிறர் விரும்புவண்ணம் கதைகளைச் சொல்லும் திறமும் உண்டாவது அருமை ஆனால் நமது பிள்ளையவர்களிடம் கவித்துவம் செய்யும் வல்லமையும், கதைகளைப் பிறர் "உள்ளங்கைநெல்லி யங்கனிபோல" அறியும்படி சொல்லும் திறமையும் அதிகசிறப்பாய அமைந்துள்ளன'

பின்னர் நமது பிள்ளை இராஜாங்க சரித்திர சபையின் அங்கத்தவர்களில் ஒருவராயினர். (Fellow of the Royal Historical Society)

'இந்திய கதைகள்' இத்தகைய சிறப்புக்களுடன் உலகெங்குமபரவியபின்பு நம் பிள்ளை தமமுயற்சியிற் சிறிதும் குன்றாவண்ணம் "இந்தியகிராமத்தார் வாழ்க்கை" (Life in an Indian Village) என்னும் பெயர்பூண்ட ஓர் ஆங்கிலவசன நூலை எழுதி வெளியிட்டார். இந்நூல், இந்திய கிராமத்தார் வாழ்க்கை யனைத்தையும் கண்ணுற்றுக் கண்டதுபோல் இருந்தவிடத்திருந்தே அயல்நாட்டவர்களும் எளிதில் அறிந்துகொள்வதற்கு ஏற்றகருவியா யிருக்கின்றது. இவ்வரிய நூலுக்கு முன்பு சென்னைக் கவர்னரா யிருந்த கிராண்டடப் பிரபு (The Right Hon'ble Sir M. E. Grant Duff, G C. S. I) சிறந்தபாயிரமெழுதியுள்ளார். வசனநடை எழுதுவதில் வல்லவர்களாகிய ஆங்கிலேயர்களும் அமெரிக்கர்களும் மற்றும் பல தேயத்தாரும் இஃது அமிழ்தினும்

இனிய நடையில் இயன்றுளதென்பப் புகழ்ந்திருக்கின்றனர். இந்நூலைக்குறித்துப் பல ஆங்கில கவிஞர்களும் கல்விமான்களும் தம்முடைய அபிப்பிராயத்தை வெளியிட்டுப் புகழ்ந்துரைத்திருக்கின்றனர். அவற்றுள் இரண்டொருவர் அபிப்பிராயங்களை இவ்விடத்து எழுதுகின்றோம்.

ஜேம்ஸ் பிரைஸ் (The Right Hon'ble James Bryce, D C L )கூறுவதாவது 'இந்நூலிற் கூறியுள்ள விஷயங்கள் படிப்பவருக்குரிக்க இனிமையைப் பயப்பனவாய் இருக்கின்றன. இந்தியாவின் நடைவடிக்கைகளை உள்ளது உள்ளவாறே அறிய விரும்பும் எம்மவர்களுக்கு, அந்நாட்டினர் வழக்கங்களைக் கேட்டறிந்தெழுதும் ஆங்கில வித்துவான்களின் நூல்களைக் காட்டிலும், "பாம்பறியும் பாம்பின்கால்" என்பதுபோல் தமது வழக்கங்களைத் தாமே உள்ளவாறு வெளியிட்டுள்ள 'இந்திய கிராமவாழ்க்கை' என்னும் புத்தகம் அதிக நன்மைசெய்யும் என்பதிற் சிறிதும் சந்தேகமில்லை'.

சத்தியநாத நிபுணர் தற்காலம் டாக்டர், (Professor Sattianadhan, M. A., L. L. D.,) ஒருமுறை' இந்தியாவின் வித்தியாபிவிருத்தி" என்பதைப்பற்றி உபந்நியாசஞ் செய்தகாலையில் பம்பாய், கல்கத்தா முதலிய இடங்களில் பற்பல கல்விமான்கள் வெளியிட்டுள்ள பல நூல்களைக் குறிப்பிட்டபின் நமது சென்னை இராஜதானியைப்பற்றிப் பேசும்போது நமது பிள்ளை இயற்றியுள்ள "இந்தியகிராமவாழ்க்கை" யொன்றையே

சிறப்பித்துப் பேசினார். மற்றும் இவ்வரிய வசன நூலின் இதுபோன்ற சிறப்பினை விரிக்கிற்பெருகும். சிலவருஷங்களுக்கு முன் சென்னைக் கவர்னராக இருந்த ஹாவலக் (Lord Havelock) பெருமான் நமது பிள்ளையின் கல்வித்திறத்தை அவர் வெளியிட்டுள்ள நூல்களால் உணர்ந்து, இவரை வரவழைத்து நேரிற்கண்டு சென்னை சர்வகலாசாலை 'அங்கிகளுள் ஒருவர்' (Fellow of the Madras University) என்னும் பட்டத்தை மனமுவந்து அளித்தனர்.

இதற்பிறகு, நமது பிள்ளை தம்மை இந்தத் தகைய உச்சநிலைக்குப் பாத்திரமாக்கிய கலாசாலைக்கும், போதகாசிரியராகிய டாக்டர் மில்லர் துரையவர்கட்கும் அழியாப்புகழ் விளைவிக்கக் கருதி,

"எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு"

என்னும் நீதிவாக்கியத்துக்கு இலக்கியமாயினார்.

அது எங்ஙனம் எனின்:—நமது பிள்ளை தாம் வாசித்து விருத்தியடைந்த கலாசாலைக்குவருஷாந்தர மகோற்சவம் (College Day) வருஷந்தோறும் நடத்தவேண்டும் என்றுமுன்வந்தார். அஃது 1891 வது வருடமுதலாக வெகு சிறப்பாய் நடந்தேறி வருகின்றது. இம்மகோற்சவம் 1891 ம் வருஷம் டிசம்பர் 24 ம்தேதியன்று சென்னைக் கிறிஸ்தவ கலாசாலையில் நடந்தேறியபோது அக்கலாசாலை மாணாக்

கருள் பலர் உபந்நியசித்தனர். அக்காலத்து நமது பிள்ளையும் உபந்நியசித்தார். அவ்வுபந்நியாஸத்தில் நமது பிள்ளை 'இன்னும் சில ஆண்டுகளுக்குள் மேல் நாட்டாரது ஆங்கில பாஷையின் கருத்துக்களும், கீழ்நாட்டாராகிய இந்தியர்களின் கருத்துக்களும் இணைந்து புதுமையான பல கருத்துக்கள் வெளிப்பட வேண்டும்' என்று முடிவுரை கூறினார். அவ்வபிப்பிராயத்தைத் தாமே முன்னின்று பின்னர் நாட்டி விட்டார். இக்கருத்தை, இவர் எழுதியுள்ள "பத்மினி" என்னும் வசன நூலுக்கு ஜேம்ஸ் பிரைஸ் வித்துவான் எழுதிய பாயிரத்தாற் காணலாம். இரண்டாவதாக, நமது பிள்ளை தமக்குப் போதகாசிரியராகிய டாக்டர் மில்லர் துரையவர்கள் இந்தியர்களின் வித்தியாபிவிருத்தியை முன்னிட்டு உழைத்த உழைப்பையும், இவ்விந்தியர்களிடத்து அப்பெருமான் காட்டிய கருணையையும் என்றென்றும் உலகமறிய விளக்கமுறச் செய்விக்க எண்ணி, அக்கலா சாலை மாணவர்களிடத்தும், மற்றும் பல பிரபுக்களிடத்தும் பொருளுதவியைப் பெற்று அத்தொகையைக் கொண்டு டாக்டர் மில்லர் துரையவர்கள் திரு உருவைக் கிறிஸ்தவ கலாசாலைக்கு முன்றிலில் ஸ்தாபித்தனர். இது விஷயமாய நமது பிள்ளையின் நன்முயற்சி மிகவும் பிரஸ்தாபிக்கப்பட்டது. டாக்டர் மில்லர் துரையவர் உருவைத் தாபிக்கும் போது தற்காலத்தில் சென்னைக் கவர்னராகிய லார்ட் ஆம்திலபிரபு (Lord Ampthill G. C. I. E

சபா நாயகராக வீற்றிருந்தார் அக்காலத்து மில்லா விக்கிரக சங்கத்தின் சபாநாயகராக இருந்த ம-ள-ள-ஸ்ரீ பி. சென்ட்சலராவ் அவர்கள் தமது முடிவுரையில் கூறியதாவது — "யாங்கள் தலையிட்டுக்கொண்ட இந்த ற காரியத்தை முட்டின்றிச் செய்துமுடிக்கும் வல்லமைப் பெரும்பாலும் மிஸ்டர் ராமகிருஷ்ணபிள்ளை யவர்களுடையதாகவே இருந்தது. அவர் இவ்விஷயத்தில் உயிரும் உடலுமாயிருந்து உழைத்திருக்கின்றார்."

தற்காலத்தும் பத்மினி என்னும் 'ஓர் இந்திய கதையை' (Padmini an Indian Romance) ஆங்கில பாஷையில் வசனரூபமாய் எழுதினார் அந்நூலின் அருமை பெருமைகளை நன்குணர்ந்து ஜேம்ஸ் பிரைஸ் என்னும் ('The Right Hon ble James Bryce) ஆங்கிலேய கிரந்த கர்த்தாவொருவர் அதற்குப்பாயிரம் பரக்கக்கூறியுள்ளார். அப்பாயிரத்தில் அக்கவிஞர், "இந்தியர்கள் ஆங்கில பாஷையைக் கற்றுணர்ந்து அப்பாஷையில் தம்கருத்துக்களை வெளிப்படுக்கும் நூல்களை நாம் அன்புடன் ஏற்றுவாசித்தறிய வேண்டும். அத்தகைய நூல்களுள் 'பத்மினி' என்பது முதலாவதாயிற்று" என்று ஒருபகுதி கூறுகின்றார்.

இவ்வாறே இன்னும்பற்பல விஷயத்திலும் செய்ந்நன்றி மறவாமை, நல்லினஞ்சேர்தல், பரோபகாரம், தெய்வ விசுவாசம் முதலிய நற்குணநிதியாய் விளங்கிவரும் நமது பிள்ளை

ஏழாவது எட்வர்ட் சக்ரவர்த்தியாருக்குப் பட்டாபிஷேகம் நடந்தேறியகாலத்து "பட்டாபிஷேகவாழ்த்துக்கவி" பாடியனுப்பினார். அக்காலத்து நமது சக்கிரவர்த்தியாரை வாழ்த்தி 1089 கவிஞர்கள் இப்பூவுலகத்தின் பற்பல பாகத்தினின்றும் தத்தமது இராஜவிசுவாசத்தைத் விளக்க வாழ்த்துக்கவி பாடி அனுப்பினார். அவற்றுள் 69 வாழ்த்துக்களே அங்கீகரிக்கப்பட்டன. அவற்றுள் நமது பிள்ளை கூறிய வாழ்த்து நாலாவதாய் நின்றது. இங்கிலாந்திலுள்ள அவ்வாழ்த்துக் கவித்திரட்டிலே அது இன்னும் இன்றும் ஆசியாவுக்கு நான்காவதாக வேறிருக்கின்றது, என்றும் சிறக்கும். நான்காவதாயினும், 'எதீனியம்' என்னும் பெரும் பத்திரிகை (இது இலக்கியங்களுக்குப் போதாரமாய பத்திரிகையென்றோக) "அப்புத்தகத்திலுள்ள சகலவாழ்த்துக் கவிகளுக்குஞ் சிறந்தது ராமகிருஷ்ணன் பாடல்மட்டுமே"யென்று வெட்டவெளியாகக்கூறித் திருப்தியடைந்தது. கல்கத்தாவில் வெளியாகும் 'இந்தியன்மிரர்' (இந்தியக் கண்ணாடி) என்னும் பத்திரிகை கூறியதாவது:—

"நமது சக்கரவர்த்தியாருக்குப் பட்டாபிஷேகம் நடந்தேறிய தினத்திலே சென்னை 'இந்து' (Madras Hindu) என்னும்பத்திரிகையில் வெளியிடப்பட்ட மிஸ்டர். டி. இராமகிருஷ்ணபிள்ளையவர்கள் எழுதிய பட்டாபிஷேக வாழ்த்தை இப்போது நாம் பார்வையிட்டோம். அஃது எல்லாவற்றிலும் மேம்பட்டதாயும், மேலான

கருத்தமைந்ததாயும் பிழைபாடுசிறிதுமில்லாத ஆங்கில நடையை யுடையதாயும், சொந்தவபிப்பிராய முற்றதாயும் இருக்கின்றது. அவ்வாசிரியருக்கு மேலான வந்தனம் செலுத்துகின்றோம்'' இதனால் நம்மவர் 'ஆயிரத்தொன்றும் புலவ'ராயினர்.

இன்னும் இவ்வாறே சென்னையிலும், மற்ற விடங்களிலுமுள்ள பத்திரிகைகள் புகழ்ந்ததை எழுதிற பெருக்கும் பத்மினியைக் குறித்துச் சிமைலூஜக் என்னும் பெயர்கொண்ட மாதாந்தப்பத்திரிகை எழுதும்போது "இராமகிருஷ்ணன் பெயரும் R. C. டட் பெயரும் இந்தேசத்து ஒவ்வொரு வீட்டாருக்கும் தெரிந்தவை'' என்றது. இதைவிடப் பிரதிஷ்டை வேறென்ன வேண்டும்?

தற்காலம் நமது பிள்ளை சென்னை மஹா நீதிஸ்தலத்தில் (Madras High Court) துவிபாஷி (Interpreter) என்னும் உத்தியோகத்தை வகித்துள்ளார். இவருக்கு ஆங்கிலபாஷையிலும், தமிழ்பாஷையிலும் உள்ள பிரீதி அதிகம். இவர் சென்னை யுனிவர்ஸிட்டைச்சேர்ந்த ('இரேவிடியன் போர்டு ஆப் எக்ஸாமினர்)சுதேசபாஷாபரீக்ஷாதிகாரிகளின் கூட்டத்தின் தலைவரானவர். இவர் பரீக்ஷாபத்திரங்கள் அந்தந்தவகுப்பிற்கும் பிள்ளைகளின் தேர்ச்சிக்கும் போதியதாகவேயிருக்கும். இவர் 'திருமாலுக்கடிமை.' [illegible]. பிறந்த கிராமப்பற்று, தாய்பாஷை, இவை[illegible]லும் அபிமானம் உள்ளவர். இவர் எழுதிய[illegible] தங்களிலே செங்கற்பட்டின் வருணனைகளைக்கா

ணலாம் அந்தஜில்லாவே இவர் பிறப்பிடம். இவர் குழந்தையிலிருந்தே இராஜபக்தியூட்டப் பெற்றவராதலால், இவருக்கு இங்கிலீஷ்மன்னர் விசுவாசம் அதிகம். இவர் ஸமித்துரையின் துவிபாஷகரான வரதப்பிள்ளையின் பேரனாயினதால், திப்புசுல்தானிட தந்தக்கட்டிலிற் படுத்துறங்கும் பாக்கியமும்பெற்றார். அதனாலன்றோ, இவருக்கு எப்பொழுதும் மேலான எண்ணமிருக்கின்றது! ஒருவரிடத்தில் விசேஷயோக்கியதை யுண்டு இருப்பதாகக்கண்டால், அதனைப் பரிமளிக்கச்செய்யாதுவிடார். திரிகரணசுத்தியோடு அவருக்கு உபகாரஞ்செய்பவர். பார்த்தோர் பலமுறையும் பாராட்டக் கூடிய செல்வாக்கும், பேரும்பெற்றுத் 'தோட்டக்காட்டுவீட்டில்' இடம்பெற்றிருந்து பின்றிச சென்னையிலே பலருக்கும் உபயோகமாக வாழ்கின்றார். இவரைநோக்கிப்பலர்

'கருத்தழிவர்,'

'என்றே யிவர்க்குர மென்று.'





இராஜதர்மப்பிரவீணர்

# திரிசிரபுரம் இராயலு ஆரோக்கியசாமி

# தம்பு செட்டியார் C. I. E.

1 "கட்டுரை விரித்துங் கற்றவை பகர்ந்தும்
பட்டிமை துடைக்கும் பயன்கெழு மொழியினன்."—

மணிமேகலை

2. "பொறைக்க யிறந்த புகழையினை, சொல்லெனும்
விறற்க யிறந்தன விருந்தைக், குரவர்சொன்
மறைக்க யிற்றினை மனைத்தைத், திருவைகல்
அறக்க யிறந்தில அசைப்பவா எனறுமே

3 "நிறைதானளக்குந் திறல்வேந்தற்கரிய சீரான்,
குறைதானிரக்குமவாக் கோடிக் குறுக்கற்பான்,
இறைதான வெறுப்பு மணிநாகமு மின்று தாங்கும்
பொறைதானெடுக்கும் மிகுமாற்றல் பொருந்திய
தோளான்."—பிரபுலிங்க லீலை

திரிசிரபுரம் இராயலு ஆரோக்கிய சாமி தம்புசெட்டியார் 1837ம௵ ஏப்ரல்மீ தேசாதி இராயலுசெட்டியார் தம்செல்வக்குழந்தையாகப்பிறந்தவர். இவர்கள் கத்தோலிக்கக் கிறிஸ்துவமரபினர். தந்தையார், கவரை குலத்திற்குத் தலைவராக விளக்கமுற்றவர். அன்னைகித்தேரி அம்மையாரோ சகல நற்குணத்திற்கும் உறைவிடமாயிருந்தவர். தாய் தந்தையர்கள் தமக்கு ஆறாவதாகப்பிறந்தகுழந்தை புத்திரனாகவே அவனைச்சீராட்டி வளர்த்து வந்தார்கள்.

துறந்தார்கள். தம்புதனது தாயாரெழுதிவைத்த மரணசாதன அதிகாரிகள் ஐவரிலொருவரான மைத்துனரும் பிற்காலத்து மாமனுமாகிய பொன்னு செட்டியாருடைய கண்காணிப்பில் வளர்ந்து படித்துவந்தனன். தாய்ப்பாஷையாகிய தெலுங்கை வாசித்துத் தமிழ்ப்பாஷையையும் கற்று தம்புவுக்கு ஆங்கிலம் ஓதும் ஆர்வம்பெருகியது. ஆதலாலிப்போது கிறிஸ்டியன் காலேஜ் என்று வழங்கும் பிரீசர்ச்மிஷன் பாடசாலையை அடைந்தான். விடாமுயற்சியோடு படிப்பனவற்றைப் பாங்காகப் படித்துவந்தான். தன்பாடங்களை விசேஷ கவனத்துடன் வாசித்து முயற்சி பிடிவாதங்களுடன் பல நூல்களைக் கிரமமாகமுடித்து மலையடியினின்று படிப்படியாய உச்சிக்குச் சென்றதுபோலக் கல்வியிற் சிறந்து விளங்கினன். ஆங்கில காவியங்களில் தம்பு விசேஷப்பற்றுடையவன். ஆங்ஙனம் பற்பல பாரகாவியங் கற்பயின்றால் 'வாலறிவன் நற்றாள் தொழவும்,' தருமமும் தாழ்மையும் மானுடர்களுக்கு அடுத்தனவென்று தெரியவும் இவனதுபுத்தி விரிந்தது. இவைகளை விஸ்தரித்துச் சமயம் நேர்ந்துழி எல்லாம் எழுதுவான். இவ்வாறு எழுதப்படுவன இவனது வயதினருக்குச் சாத்தியமாகாதனவாயும் முதியோர் மெச்சாதிருக்க அசாத்தியமானவையாயும் இருக்கும். இவனதுவியாசத்தை 1854ம் வரு சென்னைக்கவர்னர் மெச்சி ஓர் வெகுமதி யளித்தனர். மேலும் இவனது கடிதங்கள் பற்பல முக்கியவிஷயங்களைக் குறித்த

தவை. அக்காலத்தில் நடைபெற்றுவந்த ஆங்கி
லபத்திரிகைகள் சிலவற்றிற் பிரசுரமானவற்
றை ஓதுவோர்களிப்புடன் ஓதிவந்தார்கள். பத்
திரிகைகளுக்குக் கைசலிக்காது தம்பு எழுதி
யதுபோலவே வாசிப்போர்களும் மனஞ்சலியா
து வாசித்துவந்தார்கள். இவன் எழுதிப் பத்
திரிகைகளை விளங்கவைத்து வந்தவிஷயங்கள்
அனேகத்தும் சுகாதாரம், பெண்கல்வி, பால்ய
விவாகத்தால் நேருமதீங்குகள் ஆகிய அதிமுக்
கிய விஷயங்களைப் பற்றியே இருக்கும். இங்கி
லீஷ் கல்வியை ஒருவாறு பூர்த்தி செய்த
பின் அக்காலத்தியவர்த்தக சங்கங்களில் முதன்
மை யடைந்தது, தம்புவின் தகப்பனார் (Book
Keeper) முக்கிய கணக்காளராகவிருந்து கீர்த்தி
பெற்ற விடமாகிய கிரிபித் (Griffiths & Co)
என்னும் அவுஸ் ஆகையால், அதிலே இவனும்
அமர்ந்தான். ஒருவருஷத்தில் வர்த்தகத்திற்குரிய
அநேக வேலைகளைநன்றாய்க் கற்றுக் கொண்
டான். வியாபார உளவுகளையும் அதற்குரிய
கணக்கு முறைகளையும் நன்றாய்த் தெரிந்துகொ
ண்டு கணக்கு வேலையில் மிக்க சமர்த்தனாயி
னன். இங்கு சிலகாலம் தங்கியிருந்தபிறகு செ
ன்னை இராணுவத்தைச் சேர்ந்த குவார்ட்டர்
மாஸ்டர் ஜெனரலாபீசில் ரைடர் வேலைகள் மூன்
றுகாலியாயின. அவைகளுக்குத் தக்கவர்களை
நியமிக்கப் போட்டி பரீக்ஷை ஒன்றினை நடத்
திப் பரீக்ஷிக்கப்பட்ட 150 பெயர்களில் முத
லாகநின்ற மூவர்களுக்குமாத்திரமே வேலைகள

கொடுக்கபபட்டன. அமமூவரில அதிக சம்பள மூடைய உததியோகம தமபுவுககே கொடுககபபடடது.

இந்த உததியோகததில 1855ம ஷூ டிசமபா மாததததில் அமாநதவராயினா. ஷெ ஆபீஸ மேலதிகாரிகளாக விருநத ஒவவொரு ஆபீஸரும இவாதுவேலைததிறமையையும ஒழுககததையுமகணடு மெசசிககொணடனா. ஐநது வருஷததில நம்மவா அதனால முககியகஜானு திகாரியாக நியமிககபபடடாா. தமது அநத ஸது பெருகபபெருகததமது பொறுபபுமபெருகி வருகிறதெனறு தெரிநது மிக ஜாககிரதை யாகவே ஒழுகிவநதனா. இவவுததியோகததிலி ருககும பொழுதும தமபுசெடடியாா விவாகமா காதவா பாலிய விவாகததால நேருவதுமுறறி லும கேடேயெனப பலபிரசஙகஙகள செயதும், பததிரிகைகளுககுப பல வியாசஙக ளெழுதி யும், தமது அபிபபிராயததை உலகோாறிய வெளியிடட இவா, தகக வயது வநத பிறகே விவாகஞ்செயவதெனத் தீாமானிததிருந்தனா. தகக வயது வநத காலததில தனககுததகுநத மனையாடடியைககொடுததருளல வேண்டுமென எலலாம வலல கடவுளைாத தமபு செடடியாா எபபொழுதும பிராாததிததுக கொணடிருப் பாா. இஙஙனமசிலகாலமாகவே இராஜமமாள எனறு பெயர்கொணடதமபுசெடடியாரின தமக கையாரின மகள இவர் மனதுககு ஒபபிய வளாகத் தோனறியபடியால, சென்னையில

விவாகம் 1860ம் ௵ ஆகஸ்டு மாதத்தில் நிறைவேறியது. தமக்கு விவாகம் நடந்த சென்னை பாப்பம்மல பிராட்வேயிலுள்ள ஆச்சிய சிரேஷ்ட அடைக்கல நாயகி கோயிலுக்கு கன கொடையாகப் பொன்னுருச்சமைந்த ரெங்கர் தன் மொன்றை நந்தந்தனர். அதின் வேலைத்திறமைக் காக இப்பொழுதும் அது அவருடைய புகழ் அங்கே விளங்குவதைக் காணலாம். விவாகமான சிலநாட்களுக்குள் திம்மரென இவரொரு வருஷம் நீலகிரியில் வசிக்க நேர்ந்தது. மகா உஷ்ணமான சென்னையிலிருந்து நீலகிரிக்குப் போய் வசிப்பதற்கு எவரும் இஷ்டப்படுவராயினும், நமது தம்புசெட்டியார் இதுவரை சென்னையைவிட்டு நீங்காதவ ராகையால் தமது எண்ணிறந்த நேசர்களைவிட்டுப் பிரியப் பெரிதும் வருந்தினர். எனினும் இவரது உத்தியோக முறையிற் பிரியவேண்டிய அவசியம் இவர் சம்மதத்தைச் சிறிதுங் கருதாதன்றோ! அப்படியே நீலகிரிக்குப் புறப்பட்டுவிட்டார். அக்காலத்தில் சென்னையிலிருந்து திருப்பத்தூர் வரையிலும்தான் புகைரதம் ஓடிக்கொண்டிருந்தது. திருப்பத்தூர் வழியாக உதகமண்டலம் போய்ச்சேர ஐந்து மைல்களுக்கு ஒருதரம் ஜோடிமாற்றும் மாட்டுத்தபால் வண்டிகளிலேயே மூன்று நாள் வரையிலும் பிரயாணஞ்செய்து போய்ச்சேர்ந்து 1861ம் ௵ டிசம்பர் மீ வரையிலும் அங்கேயே தங்கியிருந்தனர்.

பிறகு சென்னைக்கு வந்து சிலவாரங்கள் செல்லவே, நமது சென்னை கவர்ன்மெண்டாருக்குச் சட்ட நிரூபணசபை யொன்று ஏற்படுத்தப்பட்டது. இச்சபையில் நமது இந்தியாவெங்குங் கீர்த்திபெற்று இந்துசட்டத்தில் (Hindu-Law) விசேஷப் பயிற்சியடைந்திருந்த மிஸ்டர் ஜான் டாஸன்மெயின் (J. D. Mayne) பாரிஸ்டர் சட்டநிரூபண சபை காரியதரிசியாய் நியமிக்கப்பட, அவருக்குத் தக்கதோர் உதவியாக நமது தம்பு செட்டியார் அவ்விலாகா மானேஜராக நியமிக்கப்பட்டனர். முதல் முதல் நியமிக்கப்பட்ட இந்தச் சட்ட நிரூபண சபையில் தான், வெம்பாக்கம் சடகோபாசார்லு ஓர் அங்கத்தினராகக் கவுரவப்பட்டமடைந்தனர். இவரது வம்சத்தினரே நமது கனம்' வெம்பாக்கம் பாஷ்யமய்யங்கார். இந்தச்சட்ட நிரூபண சபையில் விவகரிக்கப்பட்ட பல அவசியமான சட்டங்களெல்லாம் நமது தம்புசெட்டியாரின் சாமர்த்தியத்தால் ஒழுங்குபட்டு, எந்தவேளையில் எந்தச்சட்டத்தை எந்த அங்கத்தினர் கேட்டாலும் அதனை ஒரு நிமிஷத்தில் எடுத்துக்கொடுக்கும்படியான அட்டவணையுடன் வைக்கப்பட்டிருந்தது. இந்த உத்தியோகஞ் செய்துவந்தகாலத்தில் 1864௵ மார்ச்சு௴ தம்புசெட்டியாரின் சிரேஷ்டகுமாரன் இராயலுசெட்டி ஜென்னமானான். இச்சட்டசபைஇலாகா ஆபீஸில் $4\frac{1}{2}$ வருஷகாலம் உத்தியோகத்திலிருக்கையில், சென்னைராஜதானிக் கலாசாலையில் ஏற்படுத்தப்பட்

டிருந்த (Law College.) லாகாலேஜில் சேர்ந்து படித்து 1865ம் வருஷத்தில் நடந்த பரிக்ஷையில் முதன்மையாகத்தேறி வெகுமதியை யடைந்தனர். அங்கு இவருக்குப் போதகராயிருந்த பாரிஸ்டர் மிஸ்டர் மெயின்துரையவர்கள் "இவர்காலடைவில் நீதியிலாகாவிற் கீர்த்தி பெறுவார்" என்னும் ஆசீர்வசனத்துக்கொப்பாய் 1866ம் வருஷத்தில் பல்லாரிஜில்லா ஜட்ஜியாயிருந்த மிஸ்டர் J R. கிண்டர்ஸ்லியின் சிபார்சால் அந்த ஜில்லாவைச் சார்ந்த பர்கிடிஸ்ட்ரிக்ட் முன்ஸீபாக நியமிக்கப்பட்டார். 9 மாதகாலம் தங்கீழ் நியமிக்கப்பட்டிருக்குங் குமாஸ்தாக்களவர்களுக்கு மாங்கிலப்படிப்பு இல்லாதிருந்ததால், தாம் தீர்மானிக்குங் கேசுகளை முடிவானதிற்கும் அக்காலத்திய ஸதர்க்கோர்ட்டு ஏற்பாட்டின்படி செய்யவேண்டிய நகல்களையும் தாமே எழுதி ரிகார்டுகளோடுவைத்தும், இன்னும் ஆங்கிலத்தில்வரைந்து மேலாபீசுக்கு அனுப்பவேண்டிய கடிதங்களெல்லா வற்றையும் தாமேயெழுதியும், மனச்சோர்வு சிறிதும் கொள்ளாது ஒழுகிவந்த இவர், நீதிசெலுத்து முறைமையில் நடுவுநிலைமை அணுவளவேனு மகன்றிருந்தாரில்லை.

பல்லாரியில் ஸிவில் ஜட்ஜாயிருந்த மிஸ்டர் கிண்டர்ஸ்லி, அப்பொழுது பிரிட்டிஷ் கவர்ன்மெண்டாரின் சுவாதீனத்திலிருந்த மைசூர் சமஸ்தானத்தின், ஜுடிஷியல் கமிஷனராக நியமிக்கப்பட்டுப்பெங்களூருக்குப்போனார். ஏற்கனவே தம்புசெட்டியாரின் யோக்கியதையைக் கண்டு

கொண்ட கிண்டாஸ்லி துரை தம்முடைய ஆபீ
ஸில் காரியாயிருந்த ஜுடிஷியல் ஹெட்சிரஸ்
தேதார் உத்தியோகத்தைத் தம்புசெட்டியாருக்
குக் கொடுத்துப் பெங்களூருக்கு அழைத்துக்
கொண்டார். மைசூர்சமஸ்தானத்திலுள்ள ஒரு
வரை இவ்வுத்தியோகத்துக்குரியமனஞ்செய்யா
து அன்னியவூரிலிருந்து கொண்டுவந்தமையால்
தம்புசெட்டியாரின் நியமனத்தில் ஊரார் ஒருவா
றுமனக்கொதிப்புடையராயினர். இவர் இப்புதி
யவேலையை ஒப்புக்கொள்ளவென்று பாக்கியை
விட்டுப் புறப்பட்டபொழுது அவ்வூரிலும் சுற்று
க்கிராமங்களிலுமுள்ள ஜனங்கள் பலர் இவரை
வெகுவாயுபசரித் தாசீர்வதித்தனுப்பிய தொன்
றே இவர் அவ்விடத்திய ஜனங்களால் எவ்வாறு
மதிக்கப்பட்டனரென்பதை பெருவாரியாக விள
க்கிக்காட்டப்போதுமானது. இவர் பெங்களூரிற்
புதிய உத்தியோகத்தைக் கைக்கொண்ட
1867ம் ௵ பிப்ரவரி மாதம் முதற்றேதியன்றே
இவருக்கு அமராவதியம்மாள் என்ற மூத்த
குமாரத்தி சென்னையிற் பிறந்தாள்.

இங்ஙனம் சில மாதங்கள் செல்ல, மைசூர்
சமஸ்தானத்தை, முன் மஹாராஜா கிருஷ்ண
ராஜ உடையார் பகதூர் தத்தெடுத்துக்கொண்
ட குமாரருக்கு ஒப்படைத்துவிடலாமென இந்
தியா மந்திரியவர்கள் விடுத்த கரீதா பத்திரி
கை 1867ம் ௵ ஏப்ரல் மீ 16உ பெங்களூர் வ
ந்து சேர்ந்தது. இவ்விசேஷ செய்தி மை
சூர் சமஸ்தானக்குடிகளுக்கு மிக்க சந்தோஷ

இருக்கத் தீர்மானித்தனர். இவ்வாறு சென்னை வேலைக்கு இராஜிநாமாக்கொடுத்த சில தினங்களுக்குள்ளாக இவர் பெங்களூர் ஸ்மால் காஸ் கோர்ட்டின் இரண்டாவது ஜட்ஜி வேலைக்குப் பதிலாக நியமிக்கப் பெற்றனர்.

பெங்களூர் ஸ்மால்காஸ் கோர்ட்டு இரண்டாவது ஜட்ஜியாகவும் தஸ்தாவேஜிகள் ரிஜிஸ்டர்செய்யும் இலாக்காவின் அதிபதியாகிய ரிஜிஸ்டிரார் ஜெனரலாகவும் மூன்றுமாதம் வேலைபார்த்து வந்தார். அப்போது இவருக்கு இரண்டாவது ஆண்குழந்தை பிறந்தது. அவருக்குத் தாமராஜரென்று பெயரிட்டனர். இக்குழந்தை பிறந்ததற்கடுத்தமாதம் அதாவது 1868ம் வருஷம் ஜூலைமீ ()ெ தம்புசெட்டியார் அசிஸ்டெண்டு ஸூபிரண்டெண்டாயினர். இதற்கடுத்த மூன்றாவது மாதத்தில் அதே வேலையின் மேல்வகுப்புக்கு உயர்த்தப்பட்டனர். ஸூபிரண்டெண்ட் வேலைக்குரிய ரெவினியு அதிகாரத்துடன் முதல்வகுப்பு மேஜிஸ்திரேட் அதிகாரமும், கீழுள்ள இரண்டாவது மூன்றாவது வகுப்பு மேஜிஸ்திரேட்டுகளின் தீர்மானங்களின்மேல் அப்பில் அதிகாரமுமிருந்தன. இதுவுமன்றிச் சிவில் வியாச்சியங்களைத் தீர்க்கும் அதிகாரமும் சேர்ந்திருந்தது. இவ்வளவு அதிகாரங்களையும் மனமொப்பப் பார்த்துக் கீர்த்தியுற்றாரென்பதை விளக்க ஒருசெய்தியை இங்கு குறிக்கின்றோம். அதாவது மைசூர் சமஸ்தானத்தின் எட்டு டிஸ்டிரிக்களுக்கும் எட்டு ஜுடிஷியல் அசிஸ்ட

துக குறறவாளிகளை நீடிததகாவல தணடனை களுககுளளாககினார. பிறகு சாககார் உததி யோகஸதாகள சாககார் பணததை துர்விநி யோகப்படுததிககொணடு கணககுகளைத தபபி தமாக வெழுதிககொணடுவநத விஷயததைக குறிததுஓாரிபோாடடுகவாணமெண்டிறகுஅனு பபினார. தாஞாககா ஜிலலா இவைகளின கணக குகளைத தயாரிததுவநதவழககங்களிற் காணு மகுறைவுகள இனனினனவையென எடுததுக காட்டி அவைகளுககு வேணடிய பரிகாரஙகள இனனினனவையெனவும குறித திருநதார. இதறகாக கவாணமெணடாா தமபு செட்டியா ரைப புகழநது வநதனமளிததனா. இவவேலை யிலிருநது பெஙகளூா ஜுடிஷியல அஸிஸட ணடாக கியாபடன் ஷா துரைககுப பதிலாக மாறறபபடடார. இநத வேலைககு யூரோப்பியன ஆபீசாகளே நியமிககபபடவேண்டுமெனறு ஏற் பாடாயிருநதபோதிலுமதமபுசெட்டியாருடைய திறமையையறிநத சீபகமிஷனா அவரை இதற கு நியமிததததலலாமல ஐரோபபிய ஆபீசருககு கொடுதத சமபளமும் விசேஷ (Allowance) அலலௌனஸசும் கொடுககுமபடியும திட்டஞ் செயதார. இவவேலையைமுதலமுதலில சுதேசிக ளுககுள்ளாகபபெற்றவர் தம்புசெட்டியாரதான. பிறகு ஸமால காஸகோாடடுமுதல ஜட்ஜியாயி னார. இதனபின சீப கமிஷனர் ஆபீஸ் ஹெட் சிரஸதேதாராயினார. இது இநத சமஸ்தானத தில ஓா பெருததஉத்தியோகம. இவர் இவவுத்தி

யோகத்தை வகித்தாரென்று தெரிந்ததும் அப்போது ஐதராபாத் ரெசிடெண்டாகவிருந்த சர் ரிச்சர்ட் மீட் நம்மவருக்கு சந்தோஷஉபசாரங்கள் கூறினார். இவருக்கு இத்துடன் சீப் கமிஷனரின் அசிஸ்டண்டு செகரடரி என்னும் பட்டங்கொடுத்து அதற்குடைய உத்தரவாதமுள்ள வேலைகளுங் கொடுக்கப்பட்டன. இவ்வுத்தியோகங்களைச் சரிவர நடத்திவரும்போது தாது ஈஸ்வர பஞ்சம் தோன்றியது. அப்பொழுது பஞ்சத்தின் கொடூரத்தைப் பரிகரிக்கும் ஏற்பாடுகளைச் சொந்த ரிபோர்ட்டுகளை மிக்க சிரத்தையுடன் நம்மவர் தயாரித்து அனுப்புவார். அவைகள் ஒவ்வொன்றும் மேலதிகாரிகளின் எண்ணத்தைச் சாலவும் கவரும். இந்த பஞ்சம் வியாபித்திருந்த இரண்டரை வருடங்களில் குடிகளை இதினின்று காப்பாற்றும் விஷயத்தில் ஒருகோடியே அறுபதுலக்ஷம் ரூபாய்கள் செலவாகி கவர்ன்மெண்டாருக்கு எண்பது லக்ஷம் ரூபாவரையிலும் கடனேற்பட்டது. ஆதலால் செலவுகளைக் குறைக்கத் தக்க ஏற்பாடுசெய்ய ஓர்விசாரணைசபை கூடியது. அதில் நமது செட்டியார் ஒரு மெம்பராகவிருந்து செலவில் பத்துலக்ஷம் ரூபா குறைக்கத் தகுமான வழியைக்காட்டினர். இதனால் நமதுசெட்டியாருக்கு ஏற்பட்ட வேலைகள் அமோகமா யிருந்தபோதிலும் மனந்தளராமல் வேலைகளைச் சரிவர நிறைவேற்றினார். இந்தவேலையின் நிர்ப்பந்தத்தாலும் ஜுரத்தாலும் டில்லி தேசத்தில் விக்டோரியா

மகாராணியார இந்திய சக்கிரவர்த்தினியான தற்காக நடநத கொண்டாட்டத்திறகுப போ கக் கூடாமையாயிற்று எனினுமை, இவருககு நற்சாக்ஷிக கௌரவபபத்திரம் ஒன்று அது சமயத்திற கொடுககபபட்டது. மேலும் கவர்னா ஜெனரல லிட்டன பிரபுவின திருககரத்திலிருநதே டிலலி (Medal) பதக்கத்தையும் பெற்றூா அசிஸடனட் செககிரடெரி வேலையிலிருககுமபோது தம்பு செட்டியாருடைய நானகாவது புததிரன பிறநதான. பிதாவின பெயரே இசசிறுவனுக கிடபபட்டது. 1879ம்வருடம் மேயீ 27வ இவா டிஸடிரிகட சிவில அனட் செஷனஸ் ஜட்ஜியெனனுமபெரிய அலுவலை முதலமுதலிற சுதேசிகளின நாயகமெனனப பெறறனர். எததுணைபோ இவரை இவவுததியோகம வகிததபெருமைக்காக உயர்த்திககூறினாகள! பிற்காலத்தில மைசூா திவானன சா கே. சேஷாததிரி ஐயரும் தம்புசெட்டியாருககு ஒரு கடிதமெழுதினர். அதில் இந்த டிஸட்ரிக்ட் ஜட்ஜ் உததியோகம்பெற்ற விஷயத்தில் தாம் அதிக மனக்களிப்படைநததுமன்றி இன்னமிதைவிட மேலானபதவியை, மைசூர் ஜுடிஷியல் டிபார்ட் மென்டினளல்லா கோர்ட்டுகளுக்கும் அதிக உயர்வான கோர்ட்டின முதன்மையான பதவியைச் செட்டியார் பெறக்கடவாரென்று வாழ்த்தினர்.

அககாலத்தில் தலைமை நீதிஸ்தானமாயும் தற்காலத்தில் சீப்கோர்ட்டு என்னும்பெயர் வகிததததுமான ஜுடிஷியல் கமிஷனர் கோர்

ட்டினமுன்விசாரணைகளுக்கு வந்த முக்கியமானவைகளும் சிக்குள்ளவைகளுமான வியாசகியங்களைத் தமக்குதவியாகவிருந்து விசாரித்துத் தீர்மானிக்கும் பொருட்டு, டிஸ்டிரிக்ட் அண்ட் செஷன் ஜட்ஜியாகவிருந்த தம்புசெட்டியாரை ஜுடிஷியல் கமிஷனர் தம்முடன் சேர்த்துக்கொள்வார். நெடுங்காலம் நியாயாதிபதியாயிருந்து அனுபவமுள்ள தம்புசெட்டியாரைத் தமக்குத் துணையாகச் சேர்த்துக்கொண்ட ஜுடிஷியல் கமிஷனருக்குதவியாயிருந்ததனறியில் செஷன்கேஸ்களும் சிவில்வழக்குகளும் நேர்மையாக விசாரணையாகித் தீர்மானஞ் செய்யப்பட்டு வந்ததால், ஜனங்களுக்கு அதிக திருப்தியுமுண்டாயின. எவ்வளவோ ஜாகீர் விவாதவிஷயவழக்கிலும் இன்னும் சில முக்கியமான வழக்குகளிலும் தம்புசெட்டியார் செய்த திறமையான தீர்மானங்கள் "மைசூர் லாரிபோர்ட்டில்" (Mysore Law Reports) வாசித்தறியலாம்.

1881மஞ மார்ச்சு 21உ மைசூர் இராஜியத்தின் சுய ஆளுகை ஸ்ரீ சாமராஜேந்திர உடையார் பஹதூர் அவர்களுக்கு அளிக்கப்பட்டது. இவ்வரசாட்சியை நடத்துவதற்கு ஓர் மந்திராலோசனை சபையைக் கூட்டினார்கள். அச்சபையின் அங்கத்தினருள் தம்புசெட்டியார் முதல் கவுன்ஸிலராக (Senior Councillor) நியமிக்கப்பட்டனர். தீவான் இரங்காசாரலு ஒருவருஷத்துக்குள் காயலாவானதின் நிமித்தம், அவர் பெங்களூரைவிட்டுச் சென்னைக்குப்

போகும்படி நேரநதது. அநதசசமயத்தில் தீவா னவாகள தமவேலையை தமபுசெட்டியாருககுஒப புககொடுததுஅவாவிஷயததில தாம கொணடி ருநத நலலெணணததையும விசுவாசததையும ஓர்கடிதமூலமாயத தெரிவிததார். சென்னைக குபபோன இரஙகாசாரலுஅஙகேயேகாலமாயி னார். இரஙகாசாரலுவுககுப பின சேஷாததிரி ஐயா திவானுயினார். அதில செட்டியார் சநதுஷ டியடைநது ஐயருககுச சநதோஷ உபசாரக கடிதம போககினார. ஐயருககு அககாலததில இவா எழுதிய கடிதம கொடுதத திருபதியைப போல மறறெதுவும கொடுததிலலை. நமது தமபுசெட்டியாருககு எனறும 'அழுககா றவா வெகுளி' இருநததிலலை. சேஷாததிரிஐயர் தீவா னுகிச சில வருஷஙகள் கடநதபினபு ஐயர் சமப ளம 3000 ததிலிருநது 5000 ரூபாயககு உயாத தபபட்டபோது, செட்டியார மனமகிழநது ஓர கடிதமெழுதி வாழ்ததினார். அககடிதத்திற்கு ஐயா பதிலெழுதியதில 'மகாராஜா அவாகளின மதிப்பிறகுரிய இநத அடையாளம நம்மெல்லோ ருக்கும மகிழவைத தருவதாக இருககினறது. மேலும் மகாராஜா கருணைகூர்ந்து மதிதத அ ரசாக்ஷியின் வெற்றியால வநத கீர்த்தி மநதிரா லோசனை சபையின முதல மேம்பராகவிருந்து தாஙகள காரியங்களை விசேஷவழியில் நடத்தி உதவி புரிநததால், எனக்கு வந்த கீர்த்தியில் பெரும்பாகத்தை அடைவதற்கு மிகக நீதியா கத தாங்களே உரியவர்களாயிருக்கிறீர்க'ளெ

னாறு வியந்து பேசினார். 1884ம் ஹூ சீப கோர்ட்டு ஜட்ஜியாக விருந்த காலத்தில பல தடவைகளில் சேஷாத்திரி ஐயருககுப் பதிலாக திவானுக நியமிககப்பட்டு, அதிக திறமையோடும் சுறுசுறுபபோடும அரசாட்சியை நடததிவநதனா. 1890ம் ஹூ சீப் கோர்ட்டு பிரதம ஜட்ஜியாகவிருநத மிஸ்டா பிளமமாதுரை, வேலையை விடடுச சீாமைககுச செனறபோது, அவருடைய ஸ்தானததில செட்டியாா சீப ஜட்ஜாக அமாநது அவவேலையில ஐநதுவருஷமிருநது அடைந்த கீாததி சொலலுநதரமலல. 1894ம ஹூ டிசமபாமீ சா சாமராஜேநதிர உடையா பஹதூா அவாகள கல்கட்டாவில காலஞ்செனறபின மகாராணி வாணிவிலாச சனனிதானத்துககு 'ரீஜெணடு' பட்டமளிதது அரசாடசியை அவா வசம விடுதது மைசூா ராஜஜியததை ஆளும்படி யேற்பாடு செயயபபட்டது. இநத ரீஜனஸி அரசாட்சியினஏழுவருஷஙகளில், முதல கௌனசிலராயிருநத செட்டியாா அப்போதைககபபோது ஆகடிங்குதிவான்வேலை பாாத்து வநதகாலததில், ஐயரவாகள பாககியில்விட்டுப்போன அமோகமான வேலைகளைக் குறைவினறிச செயது பூாததியாககிய விஷயததைப் பற்றி கர்ஸனபிரபு உளளத்தில மகிழநது மெச்சினர்.

இவ்வாறு கீழ்ப்படியிலிருந்து ஒவ்வொன்ருகஏறி, மைசூர் சமஸ்தானததுப் பெருத்த அலுவலின தலையிலமர்நத தமபுசெட்டியாா, அங்

தகத வேலையில என்னென்ன செயதாரெனப தைதச சுருஙககககூறி விளஙக வைபபாம.

இவா மைசூா சமஸ்தானததது ஆலோசனைககாததராக 1881ம௵ முதல 1904ம௵ வரை அதாவது இருபது வருஷஙகள விளஙகினா. இவாகைதோநதவா, அநுபவசாலி, தூரநோககுஞ சாலவும உடையவா. ஆலோசனை சபையில எலலா விஷயஙகளையும உடனுககுடனே ஆவாஹனஞ்செயது குணதோஷ விளக்க முரைத்துக குடிகளுககுச் சாதகஞ செயது அரையாகக ஆககஙகுறிததவா.

திவானகனம. C V. இரஙகாசசாாலுC.I.E. காலமானதும தமபுசெடடியாா அவவேலைககு உரியவராயிருநதும, மறறொருவருககுக கொடுககபபடடது. இநதககுறையை ஒருவாறு பரிகரிததுத தமபுசெடடியாரைத திருபதிபபடுததுமபொருடடு சீபகோாட்டு ஸதாபிக்கபபட்டு அதில ஒரு ஜட்ஜாக இவரை நியமிததனா. வேலையை வகிததாா. நீதிபகாநதாா. சூரியனைப் போல இவா சீபகோாட்டில் பிரகாசித்தார். நியாயவாதிகளுககு இணஙகுவாா; சகபாடி நீதியதிபர்களுககுத துணையாவார்; வழககாளிகளின உயிராயினா; உலகோா் உயாத்திப்பேசுமாளாயினர். செஷன் விசாரணைககு இவா வரமாட்டாரா என்பார்கள்; சிவிலுககும் அப்படியே. ஜூரி அஸசர்களுக்கும் இவர்கச்சேரிஉத்தம கச்சேரி. நியாயத்தைக் கைப்பற்றி வழக்கிற் கேறற நியாயத்தை நியாயக்கண்ணு லறிக்து

நியாயத்தோடு நியாயஞ்சொலலும் தம்புசெட டியாரை, எநதககக்ஷியார்தாம் விட்டு விலக மனநதரிப்பாாகள்! இவர் கீழ்க கோர்ட்டுகளைச சரியாக நடத்திவநதார். அககச்சேரிக்காரர் களை அதிசயிக்குமாறு திடீரென்று பரிசோத னைககுபபோவார். திருததுவார். இவா சிபஜடஜி வேலையிலமாநத சிலநாளைககுபபிறகு, மகாரா ஜா, ஐரோபபியருககுளள மாதநிவேதனமாகிய 2500 ரூபாயும, மனமுவநது இவருககுத தநது வந்தனா.

இவர் ஆகடிங திவான வேலையிலிருநத போது அதிக உழைபபோடும சிரததையோ டும வேலையை நடததிக குடிகளுககு விசேஷ க்ஷேமததைத யுணடாககினா. அபபோதைககப போது சொறபகாலததுககுததான அவா திவா னவேலை பாாததுவநதாரெனினும இவா அவ வசசமயஙகளிற செயயவேணடியவைகளைச்செய யாமல் விடடவரலலா. காவேரி 'இலக்டிரிக ஸகீம' (Kauvery Electric Scheme) என்னும் ஜல அநதராகனி சகதியுடடும் பிரமாதமான ஏறபாடடை நடதத உத்தேசித்த சேஷாத திரி ஐயருககு வேணடிய அனுகூலவுதவி புரிந் துஉச்சாகநதநதவா செட்டியாாதான். கடைசி முறைசெடடியாா ஆகடிங்திவானு யிருநதபோ துதானமேறபடி அபாரமானவேலைககுவேண்டி யபணததைசமஸ்தானகஜானுவிலிருந்துதாமே கொடுப்பிதது வேலைஜரூராய நடககும்படியான ஏறபாடுகளெலலாஞ் செய்வித்தனா. அதனுல

யாக்கி, மகாராணி வாணிவிலாச சன்னிதானம் கலகத்தாவிலிருந்து மைசூருக்கு வரும் வரையில அரண்மனையைக் காவலுடன் பார்த்து, நகையுடைகளை மொகரிட்டுக காதது ஒப்புவித்தனர். கண்ணைக் கண்ணிமை எவ்வாறு காககுமோ அவவாறே மகாராஜாவின சொத்துக்களை இவர் காத்துவந்தனர். அது உத்தம மநதிரியின் இலக்கண மனறோ?

இவர் எத்தனைக கவாளா ஜெனரலகளைப பேட்டிசெய்தவா! விட்டன பிரபுவின திருக்கையால் டெல்லிப்பதககததைப் பெறறவா. ரிப்பன பிரபுவைத் தலைபபெயது நெடுநோம சமபாஷித்து, அவா உரோமனகாதோலிககு வேதத்தை யனுசரித்தவ ராதலால, மைசூா சமஸ்தானததில் உரோமன காதோலிககா பெருகிவருவதை எடுதது மொழிநது, பிரபுவின மனதைக் குளிரவைத்தவர். பின்புடப்பிரின, லான்ஸ்டவுன, எல்ஜின பிரபுக்களையும் பேட்டிசெய்து உரையாடி அவர்களால் மதிக்கப்பெற்றுக் கடைசியாய் கர்ஸன் பிரபுவையுந தரிசிததவர். பேசியவா. கர்ஸன் முன்னிலையிற் பிரசங்கமும் புரிந்தவர். இபபொழுது நம்மைப் பொதுவுறவாளும் ஏழாவது எட்வர்ட்சக்கிரவர்த்தி 1875ம்வருஉ வேல்ஸ் இளவரசராக இநதியாவைத் தரிசித்த காலையில், நம்மவர் அவர் சந்நிதானத் தாற்றனா. பேசும்பாககியம் பெற்றனர். 1903ம்வருஉ எட்வர் சக்ரவர்த்தியார் மகுடாபிஷேக கொண்டாட்ட டெலலி உத்சவத்திற்குத் தம்புசெட்டியார்

மகாராஜா ஸ்ரீகிருஷ்ணராஜேநதிர உடையாரு டன சென்று பெருமைபபடுதத திருமபினார.

இவர காலஞசென்ற மகாராஜா சாம ராஜேநதிர உடையார சிமமாதனமேறிய காலததில், அவரது ஆளுகை நெடிதோஙகிப புகழ பெறறுக குடிகளுககு நனமை எலலையிலாது புரிநது வருவதாயிருககககடவது என ஆசிப பததிரம வாசிததார. இவர வாககு அபபடியே பலிததது 1903ம் ஷு மகாராஜா கிருஷ ணராஜேநதிர உடையார சிமமாதனமேறினார. அககாலததிலும செட்டியார மகாராஜா கூட விருநதனர. கடவுளைப பிராரததிததனர. இவர பிராததனைகள பலிககுமாறு காணபோம! த டையிலலை வெனனில இளவரசர ஜனனமான தும நமமவர காலஞசென்ற மகாராஜாவுககு வாழததுபபததிரம எழுதியிருநத குழநதை யைபபெரிதும வாழததினர அதுபோலவே ஸ்ரீ கிருஷ்ணராஜேநதிர உடையார எலலாததுறை யிலும்படிநது எலலாவிஷயஙகளையும தெரிநது இளமையிலேயே முதிரநத அறிவினராகி அரியாசன ததமாநதனா அககாலததிலே இவர செயதபி ராரததனை வண பலிதமாகாது 'மனமபோ லனறோ மாங்கல்யம்.'

இவர், நாட்டவர்களுககாக எததுணை நன மை புரிநதுள்ளார் என்பதை இங்கு எடுத் துக்கூறித் திருப்தியடையக்கூடுமோ? நிலத்திர வையைக கொடுக்க ஒருவன் தவறுவானாயின் அவன் சிறைச்சாலையை யடைவதற் குரியவனாகி

ன்றனென்னும் ஓர் அம்சத்தை நிலவருமானச் சட்டத்திலே சேர்த்து ஜாரிக்குக்கொண்டு வர எத்தனித்தபோது அதனைத் தடுத்தார். தீர்வை பாக்கியுள்ள நிலத்தை ஜப்தி செய்தாகிலும், அல்லது அவனுக்குச்சொந்தமான இதரசொத்துக்களைக்கொண்டாகிலும், வசூல்செய்து கொள்ளுவதே உத்தமமென்றார். ஆனால் இவர்வாக்குச் செல்லாவிட்டாலும், இவர் நியாயக்கடமையைப்பாராட்டித் தடுத்துக்கூறியசொற்பயனற்றதாகாது. நாகரீகம் வளரவளரப் பின்னுக்குச் செட்டியார் சொன்னதுபோல் செய்யவேண்டியதாகுமென்று நினைக்கவேண்டியிருக்கிறது.

ஸ்ரீ. சாமராஜேந்திரர் சிம்மாசனமேறிய முதல்வருஷத்தில் வந்த தசரா பண்டிகையில், மைசூரில் பொருட்காட்சிசாலை ஒன்று கூடிற்று. அதிலே கொச்சி இளவரசர் அனுப்பித்தந்த பலவர்ணங்களினால் சோதியாக செய்யப்பட்ட சில பாயமுதலான சாமான்களை வைத்தார். இன்னும் பலவழிகளில் அதனை வெற்றிக்காக முயன்றார். மகாராஜா பெரிதும் மெச்சினார். மைசூர் பெங்களூர் நகரங்களில் பாடசாலைகளும் கல்லூரிகளும் இருப்பதால் அவைகளில் ஓதும் மாணவர்கள் ஓரிடம் தாமதித்துக் கூடிப்பழகி நல்வழிப்படுவதற்கேற்ற சாதனங்களாகிய 'மாணவாவிடுதிகள்' அமைக்கப்படவேண்டுமெனக் கருதி, உழைத்து, அதற்கு வேண்டியவற்றைச் செய்து மாணவர் மனோபீடத்தமர்வாராயினார். பெண்கல்வி விஷயமாகச் சிரத்தையோடு வேலை

செய்யும்படிமிஸ மானிங துரைசானி மைசூர வநத பொழுது, நமது செட்டியார் தமது மாளிகையில ஜரவ இநதுபபெண்மணிகளைக கூட்டி அவவம்மையை உபசரிததனா அதுதான முதன முதலிலேஇருநதிறததுமாதாகளுமஹைறுகூடிப பெணகலவிஅதிகரிகக வேணடியதறகான உபாயஙகளைச சமபாஷிததுத தமது அபிபபிராயஙகளை ஓரிடததில வெளியிட்டுபபேசிககலபபதறகு ஏற்றசமயமாகவிருநதது. மேலும இவாதான முதனமுதலிலே, அதாவது 1877ம் ஷுலததிலே சாமராஜேநதிரா பஹதூா அரசாக்ஷியை வகித்து அரசாஙகததின தலைவராக விளஙகும காலததிலே, அவருககு உதவியாக ஆலோசனை சபை யொனறினை ஸதாபனஞசெய்ய வேணடியது முககியமெனறு எடுததுக கூறியவா. அவ்வாககின பயனை அறிநது சபை ஏறபட்டது அச்சபையின பேரவையவியாகவும செட்டியாரே துலங்கினா. மைசூா இராஜ்யததில பிறநதவாகள மாததிரமே இராஜ்யததில உயாவுடைய உத்தியோகஙகளைப் பெறுவதற்கு அருகராகுமபடி சிவில் சொவீஸபரீக்ஷையொனறு ஏற்படுத்தி, அப்பரீக்ஷைக்கு மைசூர் இராஜ்யததினா மாததிரம சேர்ககபபடவேணடுமெனறு மநதிராலோசனை சபையில் பேசசுநடநத போது நம்மவா 'அபபடியானல் அப்பரீக்ஷையை ஏற்படுத்தும் ஈத்தேசமே பலித மற்றுப் போகும். ஏனெனில் அயல் நாட்டிலுள்ளோர்

அதிக படிப்பும் திறமையுமுடையவர்களாகவிரு ப்பார்களேயாகில் சமஸ்தானத்திற்கு வருவது பெருமிதமும் விசேஷ நன்மைக் கிடமுமாயிருக் கும். ஆகையால் இந்தியாதேசத்தி லிருக்கு மெல்லோரும் அப்பரீக்ஷைக்குவர அனுகூல ... என்று வாதித்தனர். ... ஒப்பினார்கள். அதுபோல் எல்லோருக்கும்பொது வாக இன்றுவரை அப்பரீக்ஷை நடைபெற்று வருகின்றது. 'மேலும் அரசாங்க விஷயத்தில பலஜாதியாரும இருப்பதே இராஜதருமததிற குரியது. இதைநிலைநிறுததுவதறகு இப்பரீட சையோர கருவியாயிருககு' மென்று அப்போ தைககப்போது வறபுறுததி வநதனர்.

இவர பிரசஙகி, பலசமயஙகளில பிரசஙகம புரிநதுளளார்; சபாநாயகருமம் வகிததுள்ளார். இவர பிரசஙகம நலல கருதது்களடஙகியது. இவரால பேசபபட்டவைகளும எழுதபபட்ட வைகளும பததிராதிபாகளாலும் இதர புத்தி மானகளாலும மெசசப்பட்டவைகளா. இவர் தமது நண்பினாகளுககுஞ்சீமைக்கும் இந்தியா வுககும் எழுதும் கடிதஙகளிற்கூடத் தமது சமாததை வெளியிடுவார். வருணனையோடு எழுதுவார அவைகளைபபடிததுபபார்ப்பதாலே யே அவைகளிலே கண்டுளளவைகளை நேரேபா ர்பபதுபோலிருககும். அவைகளைக கையேற்றுப் படிததுப் போற்றியவாகள் ஜனரல் கிளார்க்கு, மெஸதர் பௌரிங்கு, ஜனரல கோல், ஜே. டி.

மெயின், சர் ஜேம்ஸ் லையால், லீவார்னர் முதலியவர்கள் என்றால், பெருக்கி எழுதுவானேன்?

காலஞ்சென்ற மகாராஜா சர் சாமராஜேந்திர உடையாருக்கும், மகாராணி வாணிவிலாச சன்னிதானத்துக்கும் இவர்மட்டில் இருந்த விசுவாசம் அதிகம். இவர் இருமுறை வேலையினின்றும் நீங்கி விடுவதாக அபேக்ஷித்து விண்ணப்பம் அனுப்பியும் அவைகளை ஏற்காது வேலைபார்த்து வரவேண்டுமென்று கோரி மகாராஜாவும் மகாராணியாருமவற்புறுத்தினர் அதுவன்றே அருக்கரைவிட்டுப்பிரியமனந்தரியாமை' அவருக்கடங்கி நடந்தார் நமது செட்டியார். இது அரசன் ஆணைக்கடங்குவதைக் காட்டுகின்றதே.

இவர் ஓர் தரும வைத்தியசாலையை ஸ்தாபித்துள்ளார். ஓர் பெண் பாடசாலையையும் நிருமித்துள்ளார் பலர்க்கும் பயன்படுபவர். இவரது வலக்கை செய்வது இடக்கை அறியாது இடம்பம் இவரிடம் இல்லவே இல்லை.

இவருக்குச் சமஸ்தான அலுவல்களபிரமாதமாயிருந்தபோதிலும் பொதுநன்மைக்குரிய விஷயங்களிலும் ஓய்வில்லாமல் உழைத்து வந்தார். இவரது மேற்பார்வையிலும் தணிக்கையிலும் பற்பல ஸ்தாபனங்கள் ஈடேறின. மேம்பட்டன. பெங்களூர் பைத்தியக்காரர் ஆஸ்பத்

இந்தியா கண்காணிகளில் ஒருவராயிருந்தனர்; பெங்களூர் 'பிரண்டிஷிப்' சொஸைட்டியின மெம்பர், அதற்கு வைஸ் பிரஸிடெண்டாகவும் இருந்தனர்; இராய்பஹதூர் தர்மரத்னாகரர் ஆர்க்காடு நாராயணசாமி முதலியாரின பாடசாலைக்கும் அவர் ஸ்தாபித்த பெருத்த தருமங்களுக்கும் டிரஸ்டியாகவும் பிரஸிடெண்டாகவும் விளங்கினர். சமஸ்கிருதம், சுதேசபாஷை இவைகளை வளர்ப்பதற்காகவும், கைம்பெண்கள் கல்விகற்று உபாத்திமைத்தொழில் பெறுவதற்கு அவர்களுக்குத் தக்க பயிற்சியைத் தருவதற்கும் நியமிக்கப்பட்ட தேவமகத்திவ பஹதூர் தருமங்களுக்கு டிரஸ்டி, பிரஸிடெண்டானவர்; மைசூர் மகாராணி பெண்பாடசாலை பிரஸிடெண்டு; மைசூர் சமஸ்தான உத்தியோகஸ்தரின் இன்ஷூரன்ஸ் கமிட்டிக்குத் தலைவரும் பிரஸிடெண்டாகவுமிருந்தனர். இவ்வாறு பல அலுவல்களைவகித்து இடைவிடாது உழைத்துவந்தவர்.

இவர் வேலையினின்றும் உபகாரச்சம்பளமேற்று நீங்கியதை அறிந்த நண்பர் பலர் இவருக்குக் கடிதங்கள் எழுதினார்கள். அவை ஒவ்வொன்றும் விலைமாற்றறியாப் பொன்மணிகளாகவே உள்ளது சர் ஜேம்ஸ்லேயால் (K. C. S. I.) என்னை, சர் ஆலிவர்செண்ட் ஜான்என்னா, சர் வில்லியம் வீவார்னர் (K.C.S.I.) என்ன, மிஸ்டர், எல். பௌரிங்(C. S. I.) என்ன, கர்னல் C. G. கிளார்க்கு என்ன, மிஸ்டர் ஜே.டி. மேயின என்

ண—இன்றைரெல்லோரும் வேலையினின்றும் நீங்கியகாலத்தில் இவருக்குக் கடிதம் எழுதினர்கள். இவர் மைசூரில் புரிந்த 34 வருடத்திய சர்விஸைத் தலையில் தூக்கிவைத்து இமைக்குமோர ர்; உபகாரச் சம்பளமேற்ற பிறகு காலத்தைப்போக்க என்செய்வார் என்று ஐயப்படுவர் மற்றொருவர்; சதாபரிக்கொண்டிருக்கும் இவரதுமூளை பென்ஷன் பெற்ற பிறகு என்னில் பாயுமோ என்றவர் வேறொருவர்; இவர் மைசூர் சமஸ்தானத்தினின்றும் நீங்கியபோதிலும் இவர் புரிந்துள்ள குடிகளுக்கு அனுகூலமான வேலைகளை ஜனங்கள் மறவாது நன்றி செலுத்துவார்கள் என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை யென்பார் இவருக்கு அன்பார்ந்த நண்பரானவர். இன்னன பலரும் பலவிதமாய்ப் பேசவும் வர்ணித்து உண்மையாக எழுதவும் வேலையினின்றும் நமது தம்பு செட்டியார் நீங்கிக் கனிய மனதிற குடிகொண்டிருக்கிறார். இந்தியாவின் நாற்புரவெல்லைக்குள் விளங்கும் பெருமையாளர்களைப் பெருமைப்படுத்தும் சிறந்த வெண்ணத்துடன் ஓங்கும் ஆங்கில அரசாட்சியார் நமது செட்டியாரின் வைத்திய சாலையாதிய தரும கைங்கிரியங்களையும் கௌரவமிருந்த நீண்ட சர்விஸையும் மேன்மைப்படுத்துவதற்கு அறிகுறியாக 1895ம் வருஷம் இவருக்கு ஸி. ஐ. இ. பட்டடம் அளித்தார்கள். சீப் ஜட்ஜாகவும் கவுன்ஸிலராகவும் வீற்றிருந்து மேலான நீதி பக்கத்மைக்காகவும் அரசர்க்குற்ற துணையாகவிரு

க்து வேண்டியது செய்தமைக்காகவும் மகாராஜா சர் சாமராஜேந்திர உடையார் மனமுவந்து 1893ம் ௵ "இராஜதர்மப்பிரவீணர்" என்னும் பட்டம் சூட்டினார். இவைகளைக்கொண்டு, இவரது குருவாகிய ஜே. டி. மெயின் எழுதிய வண்ணம் இவர் இன்றைக்கும் புத்திரர் பணிவிடை புரியப் பௌத்திரருடனே கூடிவிளையாடிச் சுற்றந்தழுவி அறவினைசெய்து காலத்தைச் சுகமே கழித்துவருகின்றார்.

"திருவும் இன்பும் சிறப்பும் புகழுமற்
றொருவா ஆக்கலும் நீக்கலும் உள்ளவோ?
மருவும் புண்ணிய மாந்தர்க் கவையெலாந்
தருமம் இன்றெனிற் றாமே சிதையுமால்."

"உண்டா லம்மவிவ் வுலக மிந்திர
ரமுத மியைவ தாயினு மினிதெனத்
தமிய ருண்டலு மிலரோ முனிவிலர்
துஞ்சலு மிலர்பிற ரஞ்சுவ தஞ்சிப்
புகழெனி னுயிருங் கொடுக்குவர் பழியெனி
னுலகுடன் பெறினுங் கொள்ளல ரயர்வி
லன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே."

